# தமிழர் கல்வி மேம்பாட்டுப் பேரவை

# TAMIL EDUCATION DEVELOPMENT COUNCIL




# தமிழ்மொழி

## பொதுத்தேர்வு

## 2024

TEDC -FRANCE

## வளர்தமிழ் 8

சுட்டெண்: | | | | | | | | | |

நேரம்: 180 மணித்துளிகள்

மொத்தப்புள்ளிகள் : 100

## அலுவலகப் பயன்பாட்டுக்கு

| வினா எண் | புள்ளிகள் | 1ஆம் முறை | 2ஆம் முறை | இறுதிப் புள்ளிகள் |
|---|---|---|---|---|
| 1 | 30 | | | |
| 2 | 10 | | | |
| 3 | 10 | | | |
| 4 | 05 | | | |
| 5 | 15 | | | |
| 6 | 05 | | | |
| 7 | 05 | | | |
| 8 | 05 | | | |
| 9 | 15 | | | |
| மொத்தப் புள்ளிகள் | 100 | | | |



| | |
|---|---|
| 1ஆம் முறை - பெயர் / ஒப்பம் | |
| 2ஆம் முறை - பெயர் / ஒப்பம் | |

## 1) தேர்விடை வினா - சரியான விடைக்குரிய கூட்டில் புள்ளடி இடுக.

1. 'தென்திசையைப் பார்க்கின்றேன் என் சொல்வேன்...' என்ற பாடலைப் பாடியவர்

அ) கபிலர் ☐ ஆ) சின்னத்தம்பிப்புலவர் ☐

இ) இளங்கோ ☐ ஈ) பாவேந்தர் ☐

2. உழவர்திருநாள் எனப் போற்றப்படுவது

அ) தைப்பொங்கல் ☐ ஆ) ஆடிப்பிறப்பு ☐

இ) மாட்டுப்பொங்கல் ☐ ஈ) ஆடித்திங்கள் ☐

3. எழில் என்பதன் பொருள்

அ) அழகு ☐ ஆ) காடு ☐

இ) உலகம் ☐ ஈ) பூ ☐

4. இலங்கையைச் சோழ நாட்டின் ஒரு மாநிலம் ஆக்கியவன்

அ) இராசேந்திரன் ☐ ஆ) இராசராசசோழன் ☐

இ) எல்லாளன் ☐ ஈ) குலோத்துங்கன் ☐



5. நிற்பான் என்பதன் வினையடி

அ) ஆன் ☐ ஆ) ப் ☐

இ) நிற் ☐ ஈ) நில் ☐

6. பாவலன் பேச்சுப் போட்டியில் பங்குபற்றிப் பரிசு பெற்றான். இச் சொல்லியத்தின் செயப்படுபொருள்

அ) பாவலன் ☐ ஆ) பரிசு ☐

இ) பெற்றான் ☐ ஈ) போட்டி ☐

7. ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்பதில் கேளிர் என்பது

அ) பகைவர் ☐ ஆ) நண்பர் ☐

இ) உறவினர் ☐ ஈ) தோழர் ☐

8. ஈழம் தமிழரின் தாய்மண். __________ சிங்கள அரசு தமிழ்மக்களை வந்தேறிகள் என்று கூறுகிறது.

அ) ஆனால் ☐ ஆ) ஏனெனில் ☐

இ) எனவே ☐ ஈ) ஆகையால் ☐

9. **குறள்:**

பொய்யாமை அன்ன __________________ எய்யாமை

எல்லா அறமும் தரும்

அ) புகழில்லை ☐ ஆ) செல்வம் ☐

இ) செயல் ☐ ஈ) பொருளில்லை ☐

10. தவளையின் இளமைப் பெயர்

அ) குருளை ☐ ஆ) குட்டி ☐

இ) பேத்தை ☐ ஈ) கன்று ☐

11. இந்தியத்திடம் நியாயம் கேட்டு உண்ணா நோன்பு மேற்கொண்டு தன் உயிரை ஈகம் செய்த தாய்



அ) அன்னை தெரேசா ☐ ஆ) மேரிக்கியூரி ☐

இ) நைட்டிங்கேல் ☐ ஈ) அன்னை பூபதி ☐

12. எழுபத்தைந்தாவது ஆண்டு நிறைவில் எடுக்கப்படும் விழா

அ) பொன்விழா ☐ ஆ) வெள்ளிவிழா ☐

இ) வைரவிழா ☐ ஈ) பவளவிழா ☐

13. அறிவுடைய மேலோர் நட்பு ______________ போல் வளரும் தன்மையுடையது.

அ) வளர்பிறை ☐ ஆ) தேய்பிறை ☐

இ) நிறைமதி ☐ ஈ) முழுமதி ☐

14. நாய் குரைக்கும். அதுபோல குதிரை

அ) கனைக்கும் ☐ ஆ) கத்தும் ☐

இ) முழங்கும் ☐ ஈ) ஊளையிடும் ☐

15. போலிப் புலவர்களைக் கண்டால், அஞ்சாது இழித்துப் பாடியவர்

அ) காசிஆனந்தன் ☐ ஆ) காளமேகம் ☐

இ) அங்கவை ☐ ஈ) பாவேந்தர் ☐

16. "வலம்படு வாய்வாள் ஏந்தி, ஒன்னார்" என்ற பாடல் வரி இடம்பெற்ற நூல்

அ) அகநானூறு ☐ ஆ) புறநானூறு ☐

இ) சிலப்பதிகாரம் ☐ ஈ) மூதுரை ☐

17. அத்து என்பது



அ) இடைநிலை ☐ ஆ) விகுதி ☐

இ) பகுதி ☐ ஈ) சாரியை ☐

18. ஆங்கிலேயரை எதிர்த்துப் போராடிய இறுதி தமிழீழத் தமிழ்மன்னன்

அ) கயிலைவன்னியன் ☐ ஆ) பண்டாரவன்னியன் ☐

இ) சேனன் ☐ ஈ) சங்கிலியன் ☐

19. காடு + அரண்

அ) காட்அரண் ☐ ஆ) காட்டரண் ☐
இ) காடரண் ☐ ஈ ) காடுஅரண் ☐

20. கார்காலம் என்றால்

அ) மழைகாலம் ☐ ஆ) கோடைகாலம் ☐
இ) இளவேனில் ☐ ஈ ) பனிகாலம் ☐

21. கடல் ஒத்த அறிவு என்ற உவமைத்தொடரின் உவமேயம்

அ) கடல் ☐ ஆ) ஒத்த ☐
இ) அறிவு ☐ ஈ ) ஆழம் ☐

22. காத்தான் தாவளத்தில் அரிசி உலையில் இட ஊர்

அ) எழும் ☐ ஆ) காலிக்கும் ☐
இ) அடங்கும் ☐ ஈ ) மறையும் ☐

23. அம்மா கனகாம்பரம் சூடிக் கோவிலுக்குச் சென்றார். இச்சொல்லியத்தில் இடம்பெற்றுள்ள ஆகுபெயர்



அ) சினையாகுபெயர் ☐ ஆ) பொருளாகுபெயர் ☐
இ) காலவாகுபெயர் ☐ ஈ ) குணவாகுபெயர் ☐

24. செல்லத்தில் திளைத்து செருக்கோடு மலர்ந்து நின்ற மலர்

அ) முல்லை ☐ ஆ) காட்டுமல்லிகை ☐
இ) மல்லிகை ☐ ஈ ) தாமரை ☐

25. எமக்குக் கிடைத்துள்ள கடைக்கழக நூல்களின் எண்ணிக்கை

அ) 48 ☐ ஆ) 24 ☐
இ) 18 ☐ ஈ ) 36 ☐

26. சிற்றூர் என்பதன் எதிர்ச்சொல்

அ) சிறிய ஊர் ☐ ஆ) ஊர் ☐
இ) நாடு ☐ ஈ ) பேரூர் ☐

27. ஒற்றைக்காலில் நிற்றல் என்ற மரபுத்தொடர் உணர்த்தும் பொருள்

அ) உறுதுணையாய் நிற்றல் ☐ ஆ) விடாப்பிடி ☐
இ) அடக்கமின்றிப் பேசுதல் ☐ ஈ ) தடுமாற்றம் ☐

28. பொலபொல என்பது

அ) அடுக்குத்தொடர் ☐ ஆ) இரட்டைக்கிளவி ☐
இ) இணைமொழி ☐ ஈ ) அடுக்கிடுக்குத்தொடர் ☐

29. இராசராசசோழன் முதல், முதலாம் குலோத்துங்கன் ஈறாக ____________ சோழ மன்னர்கள் இலங்கையை ஆண்டனர்.



அ) ஒன்பது ☐ ஆ) ஆறு ☐
இ) ஏழு ☐ ஈ ) ஐந்து ☐

30. கவனமாகக் கேளுங்கள்! இச் சொல்லியம்

அ) ஏவல் ☐ ஆ) வினா ☐
இ) மெய்ப்பாடு ☐ ஈ ) கூற்று ☐

புள்ளிகள் 30

**2) பந்தியை வாசித்து, வினாக்களுக்கு முழுவிடை தருக.**

சுற்றுலா மிகவும் பயனுள்ள ஒரு பொழுதுபோக்கு. சுற்றுலா பல்வேறு இடங்களைப் பார்க்கவும் வேறுபட்ட மக்களைக் காணவும் பல புதியபுதிய பட்டறிவுகளைப் பெறவும் உதவுகின்றது. சுற்றுலாக்கள் பல வகைப்படும். அவையாவன கல்விச் சுற்றுலா, இறைநெறிச் சுற்றுலா, பொழுதுபோக்குச் சுற்றுலா போன்றவையாகும். பூமிப்பந்தில் இயற்கை எமக்கு அளிக்கின்ற இன்பக் காட்சிகளாக எத்தனையோ அழகுகள் பரந்து கிடக்கின்றன. அருவி ஆறாகப் பாய்வதையும் நீல வண்ணக் கடல்களையும் பசுமைமிக்க காடுகளையும் பாலைவனங்களையும் ஒரே இடத்தில் காண முடியாது. சுற்றுலாச் செல்வதனால் இவற்றை எல்லாம் கண்டுகளிக்க முடியும். மாந்தன் தன் அறிவாற்றலாலும் அழகியல் உணர்வாலும் எண்ணற்ற விந்தைகளைச் செய்கின்றான். அவை காலம் கடந்தும் மக்களின் மனதில் நிலையான இடத்தைப் பெற்றுவிடுகின்றன. அவற்றில் தஞ்சைப் பெருங்கோவிலையும் மாமல்லபுரச்சிற்பங்களையும் எகிப்தில் உள்ள பிரமிட்டுகளையும் சுற்றுலா மேற்கொள்வதன் மூலமே கண்டு பயன் அடையலாம்.

1. சுற்றுலா வகைகளில் இரண்டைத் தருக.

______________________________________________

______________________________________________

2. எது மிகவும் பயனுள்ள ஒரு பொழுதுபோக்கு?

______________________________________________

______________________________________________

3. மாந்தன் எவற்றினால் எண்ணற்ற விந்தைகளைச் செய்கின்றான்?

______________________________________________

______________________________________________

4. சுற்றுலாச் செல்வதன் பயன்களைத் தருக.

______________________________________________

______________________________________________

5. பிரமிட்டுகள் எந்த நாட்டில் காணப்படுகின்றன?

______________________________________________

______________________________________________



புள்ளிகள் 10

### 3) பாடநூல் வினாக்கள் ஏழினுள் ஐந்திற்கு மட்டும் விடை தருக.

1. ஆங்கிலேயரின் மூன்று பீரங்கிகளையும் பண்டாரவன்னியன் கைப்பற்றிய இடம் எது?

______________________________

2. தொல்காப்பியத்தை எப்படிக் கூறிப் பாராட்டுவர்?

______________________________

3. போர்த்துக்கேயரினால் ஆனையிறவில் அமைக்கப்பட்ட கோட்டையின் பெயரைத் தருக.

______________________________

4. ''மன்னவனே ஏன் அழைத்தாய் எனத் தெரியும் மாற்றானாம் தொண்டைமானிடம் எனைத் தூதாக அனுப்பத்தானே'' இது யாரால், யாருக்குக் கூறப்பட்டது?

______________________________

5. பழந்தமிழர் எவற்றை அடிப்படையாகக் கொண்டு தமது வாழ்வியலையும் அறிவியலையும் அமைத்தனர்?



______________________________

6. பதினெண்கீழ்க்கணக்கு நூல்களில் உலகப்பொதுமறை என அழைக்கப்படும் நூல் எது?

______________________________

7. சீவகசிந்தாமணி என்னும் நூலை எழுதியவர் யார்?

______________________________

புள்ளிகள் 10

**4) தரப்பட்டுள்ள சொற்களைப் பொருத்தமாக வைத்து, கவிதையை முழுமையாக்குக.**

## ஒழுக்கம்

| | | | | |
|---|---|---|---|---|
| மண்ணை | துன்பம் | மறவாது | ஆசிரியர் | எண்ணத்தில் |

அன்னை தந்தை பணிந்திடுவோம்
________________ சொற் கேட்டிடுவோம்
இன்சொல் பேசிடுவோம்
என்றும் ________________ உயர்ந்திடுவோம்

தூய்மையை நாம் பேணிடுவோம்
________________ இன்றி வாழ்ந்திடுவோம்
நாளும் எம் வாழ்வினிலே
நன்றி ________________ இருந்திடுவோம்

என்றும் உண்மை பேசிடுவோம்
ஒழுக்கத்தை வாழ்வில் கடைப்பிடிப்போம்
தாய் ________________ப் போற்றிடுவோம்
எல்லோரும் ஒன்றாய் இணைந்திடுவோம்



புள்ளிகள் 05

## 5) அ) பந்தியை வாசித்து, இலக்கண வினாக்களுக்கு விடை எழுதுக.

ஓலையால் வேயப்பட்ட சிறியவீடு காணப்படுகின்றது. வீட்டைச் சுற்றி வண்ணவண்ண மலர்ச்செடிகள் வேலிபோல வளர்க்கப்பட்டிருக்கின்றன. அங்கு பெரிய மாமரம் ஒன்று நிற்கின்றது. அந்த மாமரத்தில் பறவைகள் கூடுகட்டி வாழ்கின்றன. மாமரத்தில் குலைகுலையாக மாங்காய்கள் காய்த்துத் தொங்குகின்றன. அக்கம்பக்கம் வீடுகள் எதுவுமே காணப்படாததால் அவ்விடம் அமைதியாக இருக்கின்றது.

1. இணைமொழிக்கு ஓர் எடுத்துக்காட்டுத் தருக.

___________________________________________

2. மாமரத்தில் என்ற சொல்லில் வந்துள்ள வேற்றுமை உருபு எது?

___________________________________________

3. வாழ்கின்றன என்ற வினைச்சொல்லின் இடைநிலையைத் தருக.

___________________________________________

4. இயல்புப் புணர்ச்சிக்கு ஓர் எடுத்துக்காட்டுத் தருக.



___________________________________________

5. அஃறிணைப் பன்மைச் சொல் ஒன்று தருக.

___________________________________________

புள்ளிகள் 10

**ஆ) 1. தரப்பட்டுள்ள சொல்லியங்கள் அமைப்பு அடிப்படையில் எவ்வகைச் சொல்லியங்கள் என்பதைக் கண்டறிந்து எழுதுக.**

1. நான் தாயகம் சென்று வெந்நீர்க் கிணறுகளைப் பார்த்தேன்.

___________________________________________

2. நீங்கள் நல்ல பிள்ளைகளாக வாழ வேண்டும் என அப்பா கூறினார்.

___________________________________________

3. மாறன் அங்காடிக்குச் சென்றான்.

___________________________________________

புள்ளிகள் 03

**2. பின்வரும் எச்சங்களை எவ்வகையென இனங்கண்டு எழுதுவோம்.**

1. ஓடிய ____________________

2. கடித்து ____________________

புள்ளிகள் 02

## 6) மிகப் பொருத்தமான சொல்லைக் கீறிட்ட இடத்தில் எழுதுக.

| வாழை | வாலை | ஒலி | ஒளி | மனம் | மணம் |
|---|---|---|---|---|---|

வாசலில் ________________ மரங்கள் கட்டப்பட்டுள்ளன. மண்டபம் பலவண்ண மின் ________________ ஆல் அலங்கரிக்கப்பட்டுள்ளது. மஞ்சள் வண்ணப் பட்டுச் சேலை அணிந்தவாறு நறு ________________ கமழும் மலர்களைச் சூடிய மணப்பெண் நடந்து வருகிறாள். அவளைச் சூழ கனிமொழி பேசும் மங்கையர் வருகின்றனர். அவளது ________________ மகிழ்கின்றது. மணமகன் மணமகளின் வருகைக்காய் மணமேடையில் காத்திருக்கின்றான். மக்களின் சிரிப்பு ________________ இன்னிசையாகக் கேட்கின்றது.

புள்ளிகள் 05

## 7) பந்தியை உமது வாழிடமொழியில் மாற்றி எழுதுக.

மாந்தனின் வாழ்க்கையோடு அறிவியல் பிரிக்க முடியாதவாறு தொடர்புடையது. அறிவியல் குமுகாய வளர்ச்சிக்குப் பெரிதும் உதவுகின்றது. மின்சக்தி அறிவியல் கண்டுபிடிப்புகளில் முதன்மையானது. தொழில்நுட்ப வளர்ச்சி எமக்குப் பல வகைகளிலும் உதவுகின்றது. தொலைத்தொடர்புக் கருவிகள் மக்களின் வாழ்வை எளிமையாக்கி உள்ளன.

________________________________________



________________________________________

________________________________________

________________________________________

________________________________________

________________________________________

புள்ளிகள் 05

**8) பழமொழிகளுக்குப் பொருத்தமான சொற்களை வைத்து நிறைவு செய்க.**

1. அடாது ______________________ படாது படுவர்.

2. துணிந்தவனுக்குத் தூக்கு ______________________ பஞ்சு மெத்தை.

3. அரசன் எவ்வழி ______________________ அவ்வழி.

4. அக்கரை ______________________ இக்கரை பச்சை.

5. தூரத்துத் ______________________ ஆபத்துக்குதவாது.

புள்ளிகள் 05

**9) தரப்பட்டுள்ள தலைப்புகளில் ஒன்றைத் தெரிவுசெய்து 125 சொற்களுக்குக் குறையாமல் கட்டுரை எழுதுக.**

- ✸ பண்டாரவன்னியன்
- ✸ தமிழுக்குத் தந்த கனி
- ✸ எனது தாயகம்
- ✸ நீர் சென்ற சுற்றுலா

புள்ளிகள் 15